உ

சிவமயம்

# சிவஞானபோதப் பிரகாசிகை

காஞ்சிபுரம், தொண்டை மண்டலாதீன மடாலயம்
மெய்கண்டார் மரபு ஞானபீடத்துக் குருமகா சந்நிதானம்
சீலத்திரு ஞானப்பிரகாச தேசிகபரமாசாரிய சுவாமிகள்

அருளியது

சென்னை நகராண்மைக் கழக உயர்பள்ளித்
தமிழ் ஆசிரியர் - சிவஞான வித்தகர் -
வித்துவான் - வடிவேல் பிள்ளை அவர்கள்
வாழ்க்கைத் துணைவியார்
திருமதி. பர்வதம் வடிவேல் பிள்ளை அவர்கள்
வெளியீடு.

சென்னை
1974

உ

## குரு வணக்கம்

கயிலாய பரம்பரையோன் துகளறுபோ தாநுபவம்
காக்கும் பெம்மான்
சயிலாதி மரபுரியோன் திருச்சிற்றம் பலநாடி
ஞானச் சேயோன்
பயிலாசி நிறைஞானப் பிரகாச குருநாதன்
பாதப் பூவும்
குயிலாரும் பொழிற்காஞ்சி மாவடிநீழலின்வாழ்வுங்
குறித்து வாழ்வாம்.

கானப்ர காசம் வளர்சாம கண்டத்தன்
கச்சியுளான்
வானப்ர காச விழியுடை யான்மா
வடிநிழலான்
ஊனப்ர காசங்கட் கெட்டா வொருத்தன்
உணர்வருமெய்ஞ்
ஞானப்ர காச குருநாதன் சேவடி
நற்றுணையே.

சிவமயம்

குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீன குருமகா சந்நிதானம்

திருவருள்திரு தெய்வசிகாமணி அருணுசல தேசிக

பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளிய

# வாழ்த்து

திங்கள்சேர் சடையன் தேனர் கொன்றை
வேணியன் மேனியில் வளர்முலை வடுப்பட
வளர்மலை மகள்இம் மண்ணகம் மீது
மாதே வனை அருச் சித்த வாய்மையார்
புகழ்மிகு காஞ்சியாம் புண்ணியப் பதியில்
புவியினர் பொருள்களின் நிலைதெரிந் துணரவும்
பொய்கா ணுமெய்ப் பொருளினை உணர்த்தவும்
வந்தருள் செய்மெய் கண்டார் மரபினில்
தோன்றிய காஞ்சி முனிவ! துன்னிருள்
கெடஎழுந் தருள்ஞா னப்பிர காச
முனிவ! கோதில் முனிக்கொற் றவ,எம்
நற்றவச் செல்வ!ஞா லத்துயிர் கட்கு
முன்னை அருணந்தி முனிவன் போலே
பின்னை அருணந்தி யாகிப் பெறற்கரும்
சிவஞான போதம் தெள்ளிதின் விளக்கி
உணர்த்தும்நின் ஞான வேள்வியில் ஒன்றித்
திளைத்திடார் என்றும் தெளிவிலா தாரே!

சிவஞான போதச் செம்பொருள் காட்டிட
மெய்கண்டார் சார்பில் அருணந்தி சிவமென
விருத்தப் பாவினல் விரித்து விளக்கி
சிவஞான போதப்ர காசிகை யெனும்நூல்
செய்தரு ளினைநீ, செம்பொருட் காட்சியோய்!
அற்றை நாளினும் இற்றைநாள் மானிடர்
விரிந்தநூல் கற்கும் விருப்பிலர்; வாய்ப்பிலர்
என்பதை எண்ணி ஈன்ற தாயிற்
சிறந்த தயாவுடன் சிலசெய் யுட்களில்
சிவஞா னத்தைத் தெளிய வைத்தனை!
வாழிநின் கருணை! அன்றொரு நாள்நீ
"நானலேன்" என்றுணர்த் தியஅப் பழஞ்சொல்
ஊனில் தங்கி உயிரினிற் கலந்(து)எம்
உணர்விற் சார்ந்த(து) ஓங்குசீர் தவமே
எம்மனோர்க் குறுப்பென இனிதே உணர்த்தினை!
உய்யும் நெறியினில் நின்னை நினைந்து
வாழ்தலே எம்கடன்! நீள உரைப்பதென்?
கடமை மறந்திடிற் கருணைத் தாய்போல்
மீண்டு மஃதெடுத் தாள எமக்கு
நினைவு கூர்தல் நின்கடன்
வாழ்கமெய் கண்டார் மரபு வாழ்கவே!

---

சிவமயம்

# முன்னுரை

ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர் அருளிய சிவஞான போத சூத்திரங்களின் உட்பொருளை ஒருசிறிதேனும் உணர ஏனைய 13 மெய்கண்ட சாத்திரங்கள் சிவஞானத் துணையை வழங்குகின்றன. அவையெலாம் கற்றுப் பயின்றாலும் குருமுகாந்தரம் தீக்ஷா சமஸ்கார யோக்கியதை பெற்று, சிவபூசையில் நின்று, தற்போதமடங்கி, சிவபோதம் கைவர முயல்வதே முறையாம். இவ்வுண்மையை ஸ்ரீ மெய்கண்ட தேவர் பெருமானே எட்டாம் சூத்திரத்தின் உட்கிடை யாக அருளியுள்ளார். சாத்திர அறிவுபெறும் அளவுக்குக் கற்கப்புகினும் சூத்திரங்கள் கூறும் மகத்தான உண்மை களைத் தருக்க முறையிலும், உள்ளுணர்வுகள் நிகழும் முறையிலும், மனேதத்துவ முறையிலும் உன்னுதல் நன்மை தரும். இதில் ஐயமில்லை. தத்துவ தரிசனம் முதல் சிவயோகம் வரை காட்டப்படும் சோபான முறையை வேறு எந்தக் கணக்காயரும் சிவஞானபோத சூத்திரங் களில் குஹ்யமாகக் காட்டியதுபோல் காட்டவில்லை. சந்தா னுசாரியார்கட்குப் பின் சித்தாந்தச் செம்பொருளை விளக்க வந்த துகளறுபோதம் முதலாய உயர்ஞான சாத்திரங் களும், பண்டார சாத்திரங்களும் இவைகளை வெவ்வேறு அளவிலும், வெவ்வேறு கண்ணேட்டத்திலும் விளக்கிக் காட்டியுள்ளன. சிவநெறிப் பிரகாசம், சிவஞான தீபம் முதலிய நூல்கள் மிக்க அருமையானவை ஆகும். ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் அருளிய "அருட்கடல் ததும்பும்"

எனத் தொடங்கும் குறுங்கழிநெடில் விருத்தம் 13 செய்யுட்களில், முதல் நீங்கலாக மற்ற 12-உம் "பொய்கண்டகன்ற மெய்கண்ட தேவரருளிய பன்னிரண்டு சூத்திரக் கருத்தை மேற்கொண்டு இனிது விளக்கும்" என்று பெரியோர் கூறுவர். சமீப காலத்தில் மெய்கண்ட சூத்திரங்களை யொட்டி யாரும் செய்யுள் நூல் செய்ததாகத் தெரியவில்லை. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள் இயற்றிய **சித்தாந்த உந்தியார்,** சூரியனார் கோயில் ஸ்ரீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் இயற்றியருளிய **இறைஞானபோதம்** முதலியவை நம் நினைவுக்கு வருகின்றன.

எவ்வாறாயினும் அத்தகைய நூல்கள் மிகக் குறைவே. இல்லை என்றும் கூறலாம். இக்குறையை நீக்கும் வண்ணம் திருக்கயிலாய மரபு மெய்கண்ட சந்தானம் காஞ்சி தொண்டைமண்டல ஆதீனத்தில் சற்குருவாய் இப்போது விளங்கும் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் இந்த **சிவஞானபோதப் பிரகாசிகை** என்ற அரிய நூலை அருளிச் செய்தார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் சைவம் வெல்லவும் விளங்கவும் அருளிய திருப்பாசுரத்திற்குத் தமது **திருத்தொண்டர் புராணத்தில்** 24 பாட்டுக்களில் விளக்கம் கூறி 25ஆம் பாட்டில் நாயனார் அருளிய மெய்ப்பாசுரத்தைக் குறி ஏறிய எல்லை அறிந்து கும்பிட்டேன் அல்லேன் என்றவாறு போல, இப் பிரகாசிகை மெய்கண்ட சூத்திரத்திற்கு அமைந்துள்ள சிறப்பை அறிந்து கும்பிட வல்லேன் அல்லேன்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் ஆழ்ந்த சாத்திர ஞானமும், பரந்த புலமையும், உலகம் அறியும். இந்தப் பாத்தொடை

யில் அவை வெளிப்பட்டுத் தோன்றக் காணலாம். ஒவ்வொரு சூத்திரத்திற்கும் (நூற்பாவுக்கும்) அதன் உட்கிடையாக இருக்கும் கருத்துக்களைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் சுவாமிகள் அருளியுள்ளார்கள். சாதாரணமாக உரையாசிரியர்கள் 2ஆம் சூத்திரத்துக்கும் 8ஆம் சூத்திரத்திற்குமே முக்கியம் தந்து விளக்கம் தரத் தலைப்படுவர். நம் சுவாமிகள் 3ஆம் சூத்திரத்திற்கும் 11ஆம் சூத்திரத்திற்கும் முக்கியத்துவம் தந்து ஐயம் அற விளக்கியுள்ளார்கள். அனுபவார்த்தமாகத் தசகாரியத்தையும் அவஸ்தை நிலைகளையும் விளக்கியுள்ளார்கள். சுத்த நிலையில் பரஞானத்தின் பாங்கையும் விளக்கியுள்ளார்கள். நம் சுவாமிகளின் ஆழ்ந்த சித்தாந்த சாத்திர ஞானமும், தம் துறவு நிலையில் பழுத்துக் கமழும் அனுபவ ஞானமும் ஒருங்கே இப்பாத் தொடையில் காணலாம். தம் உணர்வில் உணர்ந்ததைக் கசடறச் சொல்லும் திறனும், முன்னோர் கூறிய வியாக்கியானங்களின் உண்மைத் தெளிவை ஆய்ந்து சொல்லும் திறனும் நம் சுவாமிகளிடம் அமைந்துள்ளதை அவர் முன் அமர்ந்து பாடங்கேட்பவர் அனைவரும் அறிவர். இப்பாத் தொடையில் அந்த அனுபவங்கள் நினைவுக்கு வருகின்றன.

இந்த நூல், முதல் நூற் (பாக்களின்) பொருளைத் தியான முறையில் சிந்திக்க நம்மனோர்க்குப் பயன்படும் என்பது அடியேன் கருத்து. வேதாந்திகள் அத்வைதத்தைக் கற்றுக் கரைகாண வேண்டுவோர் 'பாஷ்யம்' முதல் 'பரிமளம்' வரை கற்க வேண்டும் எனக் கூறுவர். அதாவது, ஸ்ரீ சங்கரர் எழுதிய பிரும்மசூத்திரத்தின் பிரபல பாஷ்யம் முதல், சிவாத்வைதியான ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் இயற்றிய 'பரிமளம்' என்ற அழகிய பாஷ்யம் வரை எல்லாவற்றையும் கற்கவேண்டுமென்பது பொருள். அதுபோல் சிவஞான

எனத் தொடங்கும் குறுங்கழிநெடில் விருத்தம் 13 செய்யுட்களில், முதல் நீங்கலாக மற்ற 12-உம் "பொய்கண்டகன்ற மெய்கண்ட தேவரருளிய பன்னிரண்டு சூத்திரக் கருத்தை மேற்கொண்டு இனிது விளக்கும்" என்று பெரியோர் கூறுவர். சமீப காலத்தில் மெய்கண்ட சூத்திரங்களை யொட்டி யாரும் செய்யுள் நூல் செய்ததாகத் தெரியவில்லை. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள் இயற்றிய சித்தாந்த உந்தியார், சூரியனார் கோயில் ஸ்ரீலஸ்ரீ மீனாக்ஷிசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் இயற்றியருளிய இறைஞானபோதம் முதலியவை நம் நினைவுக்கு வருகின்றன.

எவ்வாறாயினும் அத்தகைய நூல்கள் மிகக் குறைவே. இல்லை என்றும் கூறலாம். இக்குறையை நீக்கும் வண்ணம் திருக்கயிலாய மரபு மெய்கண்ட சந்தானம் காஞ்சி தொண்டைமண்டல ஆதீனத்தில் சற்குருவாய் இப்போது விளங்கும் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் இந்த சிவஞானபோதப் பிரகாசிகை என்ற அரிய நூலை அருளிச் செய்தார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் சைவம் வெல்லவும் விளங்கவும் அருளிய திருப்பாசுரத்திற்குத் தமது திருத்தொண்டர் புராணத்தில் 24 பாட்டுக்களில் விளக்கம் கூறி 25ஆம் பாட்டில் நாயனார் அருளிய மெய்ப்பாசுரத்தைக் குறி ஏறிய எல்லை அறிந்து கும்பிட்டேன் அல்லேன் என்றவாறு போல, இப் பிரகாசிகை மெய்கண்ட சூத்திரத்திற்கு அமைந்துள்ள சிறப்பை அறிந்து கும்பிட வல்லேன் அல்லேன்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் ஆழ்ந்த சாத்திர ஞானமும், பரந்த புலமையும், உலகம் அறியும். இந்தப் பாத்தொடை

யில் அவை வெளிப்பட்டுத் தோன்றக் காணலாம். ஒவ்வொரு சூத்திரத்திற்கும் (நூற்பாவுக்கும்) அதன் உட்கிடையாக இருக்கும் கருத்துக்களைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் சுவாமிகள் அருளியுள்ளார்கள். சாதாரணமாக உரையாசிரியர்கள் 2ஆம் சூத்திரத்துக்கும் 8ஆம் சூத்திரத்திற்குமே முக்கியம் தந்து விளக்கம் தரத் தலைப்படுவர். நம் சுவாமிகள் 3ஆம் சூத்திரத்திற்கும் 11ஆம் சூத்திரத்திற்கும் முக்கியத்துவம் தந்து ஐயம் அற விளக்கியுள்ளார்கள். அநுபவார்த்தமாகத் தசகாரியத்தையும் அவஸ்தை நிலைகளையும் விளக்கியுள்ளார்கள். சுத்த நிலையில் பரஞானத்தின் பாங்கையும் விளக்கியுள்ளார்கள். நம் சுவாமிகளின் ஆழ்ந்த சித்தாந்த சாத்திர ஞானமும், தம் துறவு நிலையில் பழுத்துக் கமழும் அனுபவ ஞானமும் ஒருங்கே இப்பாத் தொடையில் காணலாம். தம் உணர்வில் உணர்ந்ததைக் கசடறச் சொல்லும் திறனும், முன்னோர் கூறிய வியாக்கியானங்களின் உண்மைத் தெளிவை ஆய்ந்து சொல்லும் திறனும் நம் சுவாமிகளிடம் அமைந்துள்ளதை அவர் முன் அமர்ந்து பாடங்கேட்பவர் அனைவரும் அறிவர். இப்பாத் தொடையில் அந்த அனுபவங்கள் நினைவுக்கு வருகின்றன.

இந்த நூல், முதல் நூற் (பாக்களின்) பொருளைத் தியான முறையில் சிந்திக்க நம்மனோர்க்குப் பயன்படும் என்பது அடியேன் கருத்து. வேதாந்திகள் அத்வைதத்தைக் கற்றுக் கரைகாண வேண்டுவோர் 'பாஷ்யம்' முதல் 'பரிமளம்' வரை கற்க வேண்டும் எனக் கூறுவர். அதாவது, ஸ்ரீ சங்கரர் எழுதிய பிரும்மசூத்திரத்தின் பிரபல பாஷ்யம் முதல், சிவாத்வைதியான ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் இயற்றிய 'பரிமளம்' என்ற அழகிய பாஷ்யம் வரை எல்லாவற்றையும் கற்கவேண்டுமென்பது பொருள். அதுபோல் சிவஞான

போத சூத்திரங்களைப் பிரமாணமாகக் காட்டிய செம் பொருளைக் கற்க விழைவோர் சூத்திரங்களுடன், சிவஞான சித்தியார் முதல் இந்த சிவஞானபோதப் பிரகாசிகை வரை கற்க வேண்டுமென்பது பொருந்தும்.

தருமையாதீன குருமகா சந்நிதானம் சீலத்திரு. கயிலை சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகளை முன்னிலை யாக்கி நம் சுவாமிகள் இயற்றிய 'சிவஞான போதார்த்தப் பாமாலை' 25 யாண்டின்முன் பாடியது. அது (ஷெ ஆதீனம் வெளியிட்ட) மெய்கண்ட சாத்திரம் முடிவில் உளது. அதனினும் இது பேரநுபவத்தின் பெரும்பயனாக விளங் கும் உண்மை, இரண்டையும் ஒருங்கு வைத்து நோக்கி யுணர்வார் நன்கறிவர்.

இத்தகைய ஞானபோனகத்தை நமது வழிபாட்டிற் குரிய குரு சுவாமிகள் நம்பால் வைத்த கருணையால் அளித்தருளினார்கள். அவர்கள் பொன்னார் திருவடிகளை நம் தலையால் வணங்கி வாழ்த்துவோமாக!

இப்பதிப்பு ஸ்ரீ ஞானப்பிரகாச மடாலய முதல் ஞான குருவின் குருபூசையான (13-5-74) அன்று திருமதி பார்வதம் வடிவேல் பிள்ளை அவர்கள் உவந்தளித்த பொருளுதவி கொண்டு வெளிவருகிறது. அவர்கட்கு நமது நன்றி உரித்தாகுக. யாவரும் இவ்வரிய நூலைப் பெற்றுப் பயனடைக!

அடியார்க்கு அடிமை,

இராவ் சாகிப்

**நல். முருகேச முதலியார்**, பி.ஏ.

தமிழ்நாடு அரசு முன்னாள் செயலர்,

முதலமைச்சர் தனி ஆலோசகர்,

பன்னூலாசிரியர்.

பிரமாதீச ஸ்ரீ
பங்குனி
உத்தர நன்னாள்
6—4—1974

உ

சிவமயம்

# சிவஞானபோதப் பிரகாசிகை

\+\+\+\+\+\+\+\+\+\+\+\+\+\+\+\+

காஞ்சிபுரம், தொண்டை மண்டலாதீன மடாலயம்
மெய்கண்டார் மரபு ஞானபீடத்துக் குருமகாசந்நிதானம்
**சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அருளியது.

## மெய்கண்ட தேவரது முழுமுதன்மை

சந்தான குருசமய குருதேவ குருபூத
சற்குரு அசற்குரு பெருஞ்
சன்மார்க்க குருவெய்ய துன்மார்க்க குருகடவுள்
சத்திகுரு காரணகுரு
கந்தாய மேகருது காரியகுருக்கள் பொய்
கத்துகுரு வித்தை ஞானம்
கற்பித்தகுரு பொய்மெய்க்குருஉபாயமொடுண்மை
காட்டுகுரு சரியாகுரு
சிந்தாத கிரியையோகக்குருவணங்குயர்வு
திகழ்பெருங் குருஎவர் எனில்
சீர்ச்சைவ சந்தான சிவஞான குருவாய்த்
தெரித்த மெய்கண்ட தேவர்
நந்தாத திருவநட் பேரின்ப வெளியினர்
நல்லசிவ ஞான போத
நற்றமிழ் முதற்பனுவல் நல்குபரமேட்டிகுரு
நளினம் என்முடி ஒளிர்கவே. 1

## முதல் நூற்பா

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

அவனவ ளதுவாம் இருதிணைப் பொருளும்
ஆக்கமும் காப்புமோர் அழிப்பும்
சிவன்செயல் அதனல் இருதிறத் துலகும்
செயற்படும் வினைமுதல் ஆனே

பவமிலை யழிக்கும் பதியையே யாதி
பகவன்என் றதுதமிழ் மறையே
தவரடி புனைந்த தலைமையோய் அடியேன்
தலையுறுந் தாளனே போற்றி. 2

## 2. நூற்பா. தத்துவ ரூபம்

உயிரெலாந் தானாய் ஒருமையாக் கலந்தோங்
குணர்வுபே ரேவலாற் றலின்மெய்
பயின்மறைப் பாற்றும் இருவினைக் குரிய
பயனுகர்ந் திவண்மிசை கீழ்உற
றயில்புறும் ஐந்து பொருளுமத் துவிதம்
அகற்சியற் றுறைமுத லரனே
வெயில் பகலவன்போல் ஆணையின் நீங்கா
மெய்ம்மையே மறுபடைப் பன்றே. 3

## மூன்றாவது நூற்பா

இலதெனின் இலதென் றுரைத்ததொன் றுளதாம்
இயம்புதத் துவங்களின் இறையின்
பலவுயிர் வேறாய் இலஎனும் உலகர்
பவுத்தர்ஐந் திரவினர் முதலில்
கலகரே கான்ம வாதிமுற் கிளக்கக்
கலைமுதல் வழிகளா றனையும்
விலகிவே றாய்த்தத் துவவுருத் தோன்ற
விளைவது மலபரி பாகம். 4

தத்துவம் அறிந்து நான்அவை யல்லேன்
தவிர்ந்தனைத் தையும்எழுத் தைந்தாய்
வைத்துளம் சித்தம் மனம்புத்தி அகந்தை
வயக்குமோர் ஒலி*புள்ளி மகாரம்
அத்தன தகாரம் அகாரம்ஓம் உருவாய்
அகக்கரு விகளியக் குவன
சுத்தகண் ணாடி நிகநம்மின் னிடத்தில்
தோன்றிய தத்துவம் எல்லாம். 5

---

*விந்து

அன்னவை நின்னில் தோன்றிய உருவம்
அவையல, நீஉடல் அல்லை,
முன்னவன் அவனும் நீயலை, உலகின்
முதல்வனின் வேறுநீ ஆவாய்
சின்னவைம் பொறியும் நீயல, செவிமுன்
சேர்புலன் தனித்தனி செறியும்
சொன்னதொன் றறிந்த புலனைமற் றொன்று
தொடுதலின் றவையலை நீயே! 6

ஐம்புலனையுய்நீ அறிவைஐம் பொறிவே
றாகும்நீ வேறு நுண் ணுடலே
வெம்புயிர் என்னில் நனவொடு கனவில்
வேறுவே றுடலுறும் மலத்திற்
பம்புறும் பொழுதில் உடலில இருளே
படிவமாய்க் கிடப்பை நீநனவில்
நம்புகால் அவற்றை அறியும் ஓர்அறிவே
நான்என வுணருதி நீயே. 7

ஊனுடற் காவல் உயிர்ப்புறப் பொறியும்
உணர்வற நனவு நண்ணுதலுற்
றூனும்விட் டவத்தைத் தானமும் கடந்தங்
கறிவறக் கிடந்தமே லேறி
நானுறும் நுண்மெய் கனவிலும் பருமெய்
நனவிலும் நண்ணலான் அகத்தே
ஏனுறும் உயிர்நான் உடல்எனல் அவற்றை
இணைந்தறி அறிவுநீ வேறே. 8

கேவலத் தொடுங்கின் உயிர்த்தும்நிற் கின்பும்
கேடுமாம் நுகர்வொடு தொழிலும்
மேவலின் றுயிர்ப்பும் ஒடுங்கலின் றுண்டா
விளக்கமுற் றிருத்தலால் வேறே

ஓவலும் உயிர்ப்பை மேவலும் தானே
ஒழிந்துகே வலம்உடல் கூடித்
தாவலின் உடற்குத் தொழில் புசிப்புண்டு
தவிரினவ் விரண்டுமுன் உருவே. 9

பிரமமே ஆன்மா என்றலும் பிழைஅப்
பெரும்பொருள் உணர்த்தும்ஈ துணரும்
அரனுணர்த் தியவா றுணர்ந்துமே லறிய
அவாவியும் அறிந்ததை மறந்தும்
திரமல மறைப்புற் றொடுங்கியும் மறப்புத்
தெளிவுறுஞ் சீவன்அம் மரவாப்
பரமனு காதலீ துயிர்க்குயிர் ஆன்மா
பற்றிய தாய்உறும் அறிவே. 10

கருவிகள் கூட்டம் உயிரெனல் பொய்யாம்
கலைமுதல் மண்வரை கருதின்
பொருவிலா மாயா காரியம் கடவுள்
புணர்த்துடல் விழிக்குறு விளக்காம்
மருவியா ணவத்தை மறையுயிர் வினையை
மருவும்நற் குருவருள் காட்டும்
பருவுடல் விளக்காய் அசத்துமாய்ப் பாசப்
பகுதியாம் அவற்றின்வே றுயிரே. 11

## நாலாவது நூற்பா

அகக்கரு வியினும் வேறுயிர் ஆன்மா
அவைஇயைந் தமைச்சர சேய்க்கும்
சுகக்கடற் சுத்தம் தொடக்குறு சகலம்
துன்னிருட் கேவலம் மூன்றிற்
புகக்கர ணங்கள் உறலறல் ஏது
புத்திசித் தம்உயிர் ஆகா
மிகக்கடுங் கரணம் வேறுயிர் வேறு
மெய்யுறு பிரமமன் றுயிரே. 12

### 5. நூற்பா. தத்துவ தரிசனம்

உடற்படு பிரமம் என்னும்ஆன் மாத்தம்
உறின்அறி பொறிதமை அறியா
தொடற்படல் இலாத சடம்தமைக் காட்டும்
தொல்லுயி ரையும்அவை அறியா
கடற்படுங் கருணைக் கடவுள்உள் ளிருந்து
கருவியா லுணர்த்தியும் ஆன்மா
விடற்படாக் காந்தத் திரும்பென இருந்தும்
மெய்யையும் தம்மையும் அறியா. 13

### 6. நூற்பா. தத்துவ சுத்தி

மெய்ப்பொருள் பதியும் பசுவும்ஐம் மலமும்
விளைந்தழி பொருள்அறு வழியும்
பொய்ப்பொருள் முயற்கோ டலகைத்தேர் வானப்
பூந்தொடை முதலவாம் சுட்டி
எய்ப்பன அழியும் சுட்டுரு பொய்யே
இரண்டும்இல் லாச்சிவ சத்தே
மெய்ப்பொருள் அசத்தாம் அழிபொருள் அவற்றை
மேவுசிற் றறிவின பசுவே. 14

### 7. நூற்பா. ஆன்ம ரூபம்

சிவமெனுஞ் சத்தின் முனம்அசத் தெதிராச்
சேரமாட் டாதன சிவம்அவ்
வவமுறும் பாசம் பொய்யென அறிவ
தன்றவை சிவத்தையும் அறியா
தவமுறும் பசுவே அவற்றையும் அறியும்
தருபதிப் பொருளையும் உணரும்
பவமறுத் தருளும் பதியொடு பாசம்
பற்றுதற் குறுஞ்சத சத்தே. 15

### 8. நூற்பா. சிவரூபம் ஆன்ம தரிசனம்

அழிவிலாத் தவத்தின் பயன்குரு வாய்வந்
    தைம்புல வேடரின் அயர்ந்த
ஒழிவிலா மனக்குள் ஒளிரும்அம் முதலே
    உணர்த்தநீ உண்மைஞா னத்தைக்
கழிவிலா துணர்ந்து கழலுவ கழன்று
    கழல்செலப் பெற்றனே பண்டை
யிழிவிலா தின்பப் புணரிவாய்த் திளைக்கும்
    ஏற்றமே யுற்றதொல் லுயிரே. 16

### 9. நூற்பா. சிவதரிசனம் ஆன்ம சுத்தி

படைப்புமுன் ஐந்தும் முழுதுணர் இயல்பும்
    பற்றஎண் செருக்கொழிந் தருண்மெய்
கிடைப்புடன் நிகழ்வாச் சுத்திசேர் உபாயம்
    கிளர்சிவ பூசையைந் தெழுத்தும்
கடைப்பிடித் துயிரின் அறிவினால் அசத்தால்
    காண்பருங் கடவுளாங் கங்கைச்
சடைப்பெருங் குருமுன் அருள்அருட் கண்ணால்
    சார்வதே சார்வறு சார்வே. 17

### 10. நூற்பா. சிவயோகம் ஆன்ம சுத்தி

சீடனார் போதம் சிவதரி சனத்தாற்
    செருக்குற அச்செருக் கடங்கச்
சேடனா ரொடுமெய்ச் செறிசிவ யோகம்
    செப்புநற் சாதகம் இதுவே
ஆடனா யகன்மெய்க் கூடலா னென
    அந்நெறி இவன்அவ னாகிக்
கூடலான் பணியின் நிற்றலான் நாற்றக்
    கொடுமையும் அறமலம் அறுமே. 18

## 11. நூற்பா. சிவபோகம் (ஆன்ம லாபம்)

ஞாதுரு ஞானம் ஞேயம்ஆம் மூன்றுள்
ஞானமா வதுசிவ யோகம்
யாதுமின் றெங்கும் ஒழிவற நிறைந்தே
யாண்டுமோ ரசைவற நின்ற
மாதுபா தியனும் ஞேயமா வதுதான்
மலரடி நிழலுறும் வாழ்வாம்
ஓதுஞா துருவும் ஞானமும் ஒழியா
தொழிந்துநீ ஞேயமா யொளிரே. 19

நிலமுதற் சிவமீ றல்லநான் என்று
நீங்கிநின் னுருவுணர்ந் துணர்த்தும்
நலமுத வியமெய் யருள்முதல் அன்றி
நான்முதல் அன்றெனத் தெளிந்து
வலமுதற் றொழிலோர் தொடுமுழு துணர்வும்
வயங்குவேன் எனச்செருக் குறாது
தலமுதல் அருளாய்ச் சிவமுமாய் இன்பத்
தனிவெளி யாவதே வீடே. 20

சுத்தசாக் கிரமே சுத்தசொப் பனமே
சுழுத்தியே துரியமே மேலாஞ்
சுத்தமெய்த் துரியா தீதமே உண்மைத்
தூய்மைய காரியம் பத்தும்
ஒத்தநான் கிரண்டு சுழுத்தியி லில்லை
உயர்துரி யத்துமூன் றதீதத்
தத்தனுர் போகப் பெருநிலை நான்கில்
அடங்குவ ஒன்பதும் அகலும். 21

முன்புகல் சீவன் முத்தனங் நனவும்
மொழிசுழுத் தியும்பயன் இலஎன்
றன்புறு சிவசொப் பனபசிவ துரியம்
அதனதீ தத்திலே முறையே

இன்புறும் ஆன்ம தரிசனம் சுத்தி
இலாபமூன் றும்உணர்ந் திரவி
நன்புறு விழிமெய் யுயிர் உயிர்உணர்வு
நண்ணொருமைக் குறும் உவமை. 22

## 12. நூற்பா. அணைந்தோர் தன்மை

உடல்ஒழி வளவும் கடவுளே இயவுள்
உளத்தனைக் கண்டுவந் திறைஞ்சிக்
கடலன சிவாநு பவம்உறும் உலவுங்
கடவுளாஞ் சிவர்திரு வேடம்
மடனறுத் தருளுங் குருவையும் இலிங்க
வடிவையும் சிவமென வணங்கு
விடவுறு மலத்திற் கொடியரை விலக்கி
மெய்யரோ டிணங்குயும் நெறியே. 23

மும்மலத் தார்க்கின் னூல்இரு மலத்தார்
மொழிவிழி யாற்சிவ மாவர்
வெம்மலத் தார்க்குள் ளொளிர்அருட் குருவாய்
விடிவதாம் இருள் எனவுணரே
செம்மையே நாடும் சிவனடி யார்க்குச்
சிவஞான போதம்மே அருளி
எம்மையாட் கொண்ட மெய்கண்ட தேவர்
இணையடித் துணையலா திலையே. 24

### வாழ்த்து

வாழ்கசிவ மெய்கண்ட வள்ளல் மலச்செருக்கைப்
போழ்க சிவஞான போதநூல்—வாழ்க
சிவசமயத் தார்சைவ சித்தாந்தம் போற்றுங்
தவசமய மாம்அடியார் கள். 25

**காஞ்சி ஸ்ரீ ஞானப்ரகாச குருப்யோ நம:**

முருகன் அச்சகம, சென்னை - 600014